# புதிதாக இஸ்லாத்தில் இணைந்து கொண்டவருக்கு சில நற் போதனைகள்

المكتب التعاوني للدعوة والإرشاد بالربوة/ قسم الجاليات

1— நிச்சயதாக இஸ்லாம் இறைவனுக்குரிய மார்க்கமாகும் அதில் நுழைவது அந்த இறைவனுக்காகவே அமைய வேண்டும். வேறு எந்த நோக்கங்களுக்காவோ அல்லது வேறு நலனுக்காகவோ இருத்தலாகா தென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்.

2 — மனிதன் உண்மையை அறிந்து கொண்டால் அதைப் பற்றிப் பிடிப்பது கடமையாகும். பின்பு அந்த மார்க்கத்தில் உறுதியாக இருப்பதற்கு ஏற்படும் பிரச்சினைகளை சகித்துக் கொண்டு பொறுமையாக இருக்க வேண்டும்.

3 — இஸ்லாம் மார்க்கத்தை கொடுத்த இறைவனுக்கு நன்றி செலுத்துவதில் ஒன்று தான், தான் விரும்புவதை பிறருக்கு விரும்புவது. எனவே இந்த அருளில் இணைந்து கொள்ள பிறரையும் அழைப்பீராக.

4 — இஸ்லாம் மார்க்கம் அரபியர்களுக்கோ, அல்லது அரபியல்லாதவருக்கோ செல்வந்தர்களுக்கோ அல்லது ஏழைகளுக்கோ சொந்தமான ஒன்றல்ல. அந்த மார்க்கத்தின் பால் யார் இணைகிறார்களோ அவர்கள் அனைவரும் போட்டி போடும் ஒரு மைதானமாகும். யார் அதை பின்பற்றுகிறார்களோ, யார் இறைவனுனின் கட்டளைகளுக்கு கட்டுப்படுகிறார்களோ, இறைவனை யார் அதிகம் அஞ்சி நடக்கிறார்களோ அவர்களே இறைவனிடத்தில் மேலானவரும் இறுதி நாளில் சிறந்த கன்னியத்தை அடைந்தவருமாவார்.

5 — இஸ்லாத்தில் இணைந்த பின் புதிதாக பல சகோதரர்களை சந்திப்பது போல், ஷைத்தானின் தலைமையில் பல எதிரிகளையும் சந்திக்க நிகழும் என்பதை மனதிற் கொள்ள வேண்டும். அவர்கள் மார்க்கத்தை விட்டும் தடுப்பார்கள். அல்லது குறைந்தது மார்க்கத்தில் முன்னேரிச் செல்வதை தடுக்க முயற்சிப்பார்கள்.

6 — அல்லாஹ் மாத்திரமே உண்மையாக உதவி செய்யக் கூடியவன். உனது உள்ளத்திலிருந்து உன்மையை அவன் அறிந்து கொண்டால், இவ்வுலகத்திலும், மறுஉலகத்திலும் அவன் உதவியாக இருப்பான்.

7 — இஸ்லாம் என்பது இறைவனால் கொடுக்கப்பட்ட சட்டங்களாகும். இந்த மார்க்கத்தை ஏற்றிருப்பவர்கள் நன்மையும் செய்வார்கள் தவறுகளையும் செய்வார்கள். எனவே! அவர்களில் மார்க்கத்தை செயல்படுத்துவர்களும் இருப்பார்கள் செயல் படுத்தாமல் இருப்பவர்களும் இருப்பார்கள். யார் தவறிழைக்கிறார்ளோ அவர்கள் தனக்கே தவறிழைக்கிறார்கள். தனிப்பட்டவர்கள் செய்யும் தவறுகளுக்காக மார்க்கத்தை குறை கூற முடியாது.

8 — நீர் இஸ்லாத்தில் இணைந்த போது சில நேரம் அதிகமானோர் மகிழ்ச்சி அடைந்திருப்பார்கள். உன்னை வரவேற்றிருப்பார்கள் இவை அவர்கள் உன் மீது கொண்ட அன்பின் காரணமாகும், இருப்பினும் உனது

உள்ளத்தில் உறுதியும், இஸ்லாத்தை பின்பற்றுவதையும், அதில் உறுதியாக இருப்பதையும் அல்லாஹ் பார்ப்பதே மிக முக்கியமாகும்.

9 – இஸ்லாம் மனிதனின் வாழ்க்கைக்கு பூரணமான ஒரு வாழ்க்கைத் திட்டமாகும். எனவே தான் இஸ்லாம் தொழுகை, நோன்பு, ஸகாத், ஹஜ் கடமை நிறைவேற்றல், உன்மை பேசுதல், ஏழைகளுக்கு கருனை காட்டல், தேவையாளருக்கு அன்பு காட்டல் போன்ற நல்ல குணங்களை ஏவுகிறது. அதே போல் மது அருந்துதல், விபச்சாரம் செய்தல், அனியாயம் இழைத்தல் பொறாமை கொள்ளல், போன்ற எல்லா தீய குணங்களையும் தடை செய்கிறது. சுருக்கமாக செல்லுவதானால் அனைத்து நற் செயல்களையும் இஸ்லாம் ஏவுகின்றது போல் அனைத்து தீய செயல்களையும் தடை செய்கிறது.

10 – நல்லவர் யார் தீயவர் யார், பொய்யர் யார் உன்மை பேசுபவர் யார் என்பதை பரிசோதனை செய்வதற்கே இறைவன் இந்த உலக வாழ்க்கையை உண்டு பன்னியுள்ளான். பாவிகளுக்கு இறைவன் சில சோதனைகளையும் ஏற்படுத்தியுள்ளான். இஸ்லாத்தில் புதிதாக இணைந்த நீர் இதைப் புறிந்து கொள்ள வேண்டும்.

11 – ஒரு முஸ்லிம் எப்போதும் பலம் வாய்ந்தவனாகவும், தான் ஏற்றிருக்கும் மார்க்கத்தை உறுதியாக செயல்படுத்தக் கூடியவனாகவும் இருக்க வேண்டும். மேலும் பொருட்களில் மிக பெறுமதி மிக்க ஒன்றை நான் ஏற்றிருக்கிறேன் என்று அதை மற்றவருக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும். அதே நேரம் மற்றவர்களுடன் பழகும் போது புத்தியுள்ளவனாகவும், பனிவாகவும் நடந்து கொள்ள வேண்டும்.

12 – இஸ்லாம் என்பது நாவால் கலிமாவை மொழிவது மாத்திரமல்ல, மாறாக அது மனித வாழ்வின் அனைத்து சட்டதிட்டங்களையும் சீராக்கும் ஒரு மார்க்கமாகும். எனவே மார்க்கம் என்பது சட்டங்கள், ஒழுக்கங்கள், நடை முறைகள் அனைத்தும் சேர்ந்ததே, ஒவ்வொரு படியாக ஏறுவது போன்று மார்க்கத்தை கொஞ்ச கொஞ்சமாக படிக்க வேண்டும்.

13 – இஸ்லாமிய நிலையங்களில் நடத்தப்படும் பாடத்திட்டங்களைப் படித்து மார்க்கத்தை அதன் தூயவடிவில் அறிந்து கொள்ள உன்னை அழைக்கிறோம்.